புராணிகர், காளத்தி

திரு. இ. சிதம்பரசாமி பாண்டியர்

அவர்கள்

# அன்பளிப்பு

உ.

கணபதி துணை.

# சமய தீக்ஷிதா

# அநுட்டானவிதி.

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

செய்தது.

இது

மேற்படியார் மருகரும், மாணாக்கரும்,

வித்துவசிரோமணியுமாகிய

ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

மாணாக்கர்

பண்டிதரால்

பட்டணம்

ம

பா ந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

பலவங்க௵ கார்த்திகைமீ

R673x1:9

பிலவங்க

மகாமகோபாத்யாய, டாக்டர்

உ

கணபதிதுணை.

# சுருக்க அநுட்டானவிதி.



யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

செய்தது.



இது

மேற்படியார் மருகரும், மாணாக்கரும்,

வித்துவசிரோமணியுமாகிய

ந. ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

மாணாக்கர்

சுவாமிநாதபண்டிதரால்

சென்னபட்டணம்

தமது

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பிலவங்க௵ கார்த்திகைமீ

கணபதிதுணை.

# சமயதீக்ஷிதர்
# நுட்டானவிதி



யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

[illegible]

இது

மேற்படியார் மருகரும், மாணாக்கரும்,

வித்துவசிரோமணியுமாகிய

## ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

மாணாக்கர்

## சுவாமிநாதபண்டிதரால்

சென்னபட்டணம்

தமது

வைசவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பிலவங்கஸு கார்த்திகைமீ.

மற்சமாமிசம் புசிப்பவருக்குப் பிரணவ
கூடாது; சிகாராதி பஞ்சாக்ஷரங் கூடாது. அ
நகாராதி பஞ்சாக்ஷரம் பிரணவங் கூட்டாது உ
ரிக்கக்கடவர். சிவாகமத்திலே தமக்கு விதிக்
படாததைச் செய்து பயனையும் இழந்து நரகத்
யும் அடைவது புத்தியாகாது.

த அநுட்டானவிதி, மற்சமாமிசம்புசிக்

விய அநாசாரம் இல்லாதவராய், சைவா

ஓனத்தில் விசுவாசமும் நியமமும் உடை

உள்ள சமயதீக்ஷிதருக்கு உரியது.

மயதீக்ஷிதருக்குப் பஞ்சப்பிரம சடங்கநியா

கூடாது; சடங்க நியாசமாத்திரமே விதிக்கப்

டது. அவர் பீசங்கூட்டி மந்திரம் உச்சரிக்க

ாது. ஆதலினாலே, பஞ்சப்பிரம நியாசம் இல்

லும், பீசம் இல்லாமலும், இவ்வநுட்டான

எழுதப்பட்டது.

MAHAMAHOPADHYAYA
DR U. V. S. IYER LIBRARY
BESANT NAGAR MADRAS

கணபதி துணை.

# நித்தியகருமவிதி.

சைவசமய மரபிலே பிறந்தவர் எல்லாரும், ஏழாம் வயசிலாவது, ஒன்பதாம் வயசிலாவது, சமயதீக்ஷைபெற்று, அநுட்டானஞ் செவ்வையாகப் பழகிக்கொண்டு மரணபரியந்தம் விடாது செய்க.

நாடோறுஞ் சூரியோதயத்துக்கு முன்னே நித்திரைவிட்டெழுந்து, "சிவ சிவ" என்று நெற்றியில் விபூதி தரித்து, கணபதயே நம என்று குட்டி, குருப்பியோ நம என்று கும்பிட்டு, சிவபெருமானை இருதயத்திலே தியானித்து ஒருதோத்திரமாவது சொல்லிக்கொள்க.

அதன்பின் எழுந்து புறத்தேபோய், மலசலமோசனஞ் செய்து, சௌசம்பண்ணி, தந்தசுத்திசெய்து, முகங்கழுவி நெற்றியில் விபூதி இட்டுக்கொள்க.

நீர்நிலையை அடைந்து ஸ்நானஞ்செய்து, ஈரந்துவட்டி, நெற்றியில் விபூதி இட்டு உலர்ந்த சுத்த வஸ்திரந் தரித்துக்கொள்க.

அநுட்டானபாத்திரத்தை வெள்ளையிட்டு, அலம்பி, சுத்தசலம் பூரித்து, சுத்தபூமியிலே சிறிது சலம்

கணபதிதுணை.

# நித்தியகருமவிதி.



சைவசமய மரபிலே பிறந்தவர் எல்லாரும், ஏழாம் வயசிலாவது, ஒன்பதாம் வயசிலாவது, சமயதீக்ஷை பெற்று, அநுட்டானஞ் செவ்வையாகப் பழகிக்கொண்டு, மரணபரியந்தம் விடாது செய்க.

நாடோறுஞ் சூரியோதயத்துக்கு ஐந்து நாழிகைக்கு முன்னாவது, இரண்டரை நாழிகைக்கு முன்னாவது, ஒன்றே முக்கானாழிகைக்கு முன்னாவது, நித்திரைவிட்டெழுந்துவிடுக.

நித்திரை விட்டெழுந்தவுடன் கிழக்கு முகமாகவேனும் வடக்குமுகமாகவேனும் இருந்து, "சிவசிவ" என்று நெற்றியில் விபூதிதரித்து, "ஓம் கணபதயே நம" என்று குட்டி, "ஓம் குருப்யோ நம" என்று கும்பிட்டு,—

மைக்களமு மான்மழுவும்
வரதமுட னபயமுறும்
மெய்க்கரமு நாற்புயமும்
விளங்குபணிக் கொடும்பூணுஞ்

விட்டு, அதன்மேற் பாத்திரத்தை வைத்து, கிழக்குமுக மாகவேனும் வடக்குமுகமாகவேனும் இருந்து, விபூதி இட்டுக்கொண்டு அநுட்டானம் பண்ணுக.

வியாதியினாலே ஸ்நானஞ்செய்யமாட்டாதவர், கால் கழுவி, ஈரவஸ்திரத்தினால் உடம்பெங்குந் துடைத்து, உலர்ந்த சுத்தவஸ்திரத்தினால் ஈரந்துவட்டி, நெற்றியில் விபூதி இட்டு, வேறு உலர்ந்த சுத்தவஸ்திரந்தரித்து, ஆசமனஞ் செய்துகொண்டு அநுட்டானம் பண்ணுக. அதுவுஞ் செய்யமாட்டாதவர், நெற்றியில் விபூதி இட்டு, சிவபெருமானைத் தியானித்து, சிவமூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக்கொண்டு கிடக்க.

வீட்டுக்கு விலக்காயுள்ள பெண்கள், மூன்றுநாளுஞ் சிவமூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக்கொண்டு, நான்காநாள் ஸ்நானஞ்செய்து அநுட்டானம் பண்ணுக.

---

## மூலமந்திரம்.

சிவமூலமந்திரம்——நமசிவாய.

தேவிமூலமந்திரம்——உமாதேவ்யை நம.

விக்கினேசுரமூலமந்திரம்——கணபதயே நம.

சுப்பிரமணியமூலமந்திரம்——சரவணபவாய நம.

சூரியமூலமந்திரம்——சிவசூர்யாய நம.

---

நீர்நிலையை அடைந்து, வஸ்திரந் தோய்த்து, ஆசமனம் பண்ணி, ஸ்நானஞ்செய்து, உலர்ந்த சுத்தவஸ்திரத்தினால் ஈரந்துவட்டி, நெற்றியில் விபூதி இட்டு, உலர்ந்த சுத்த வஸ்திரந் தரித்து, ஆசமனம் பண்ணுக.

அநுட்டானபாத்திரத்தை வெள்ளையிட்டு, இரண்டு தரம் அஸ்திரமந்திரத்தாற் கழுவிச் சுத்தி செய்து, இருதயமந்திரத்தாற் சுத்தசலம் பூரித்துச், சுத்தஸ்தானத்திலே சிறிது சலம்விட்டு, அதன்மேற் பாத்திரத்தை வைத்துக், கிழக்குமுகமாகவேனும் வடக்குமுகமாகவேனும் ஆசனத்திருந்து, விபூதியுத்தூளனஞ் செய்துகொண்டு, அநுட்டானம் பண்ணுக.

வியாதியினாலே ஸ்நானஞ் செய்ய மாட்டாதவர், கை கால் கழுவி, ஈரவஸ்திரத்தினால் உடம்பெங்குந் துடைத்து, உலர்ந்த சுத்தவஸ்திரத்தினால் ஈரந்துவட்டி, நெற்றியில் விபூதி இட்டு, வேறு உலர்ந்த சுத்தவஸ்திரந் தரித்து, ஆசமனஞ்செய்துகொண்டு, அநுட்டானம்பண்ணுக. அதுவுஞ் செய்யமாட்டாதவர், நெற்றியில் விபூதி இட்டுச்

## நித்தியகருமவிதி.

### பதிஞருமந்திரம்.

| | |
|---|---|
| ஈசாநாய நம.<br>தற்புருஷாய நம.<br>அகோராய நம.<br>வாமதேவாய நம.<br>சத்தியோசாதாய நம. | இந்த ஐந்தும் பிரம மந்திரம். |
| இருதயாய நம.<br>சிரசே நம.<br>சிகாயை நம.<br>கவசாய நம.<br>நேத்திரேப்பியோ நம.<br>அஸ்திராய நம. | இந்த ஆறும் அங்க மந்திரம். |

---

### ஆசமனமந்திரம்.

ஆத்தும தத்துவாய சுவதா.
வித்தியா தத்துவாய சுவதா.
சிவ தத்துவாய சுவதா.

---

ஓம் இருதயாய நம.
ஓம் சிரசே நம.
ஓம் சிகாய நம.
ஓம் கவசாய நம.
ஓம் நேத்திரேப்பியோநம.
ஓம் அஸ்திராய நம.

} இந்த ஆறும் அங்க மந்திரம்.

---

## ஆசமனமந்திரம்.

ஓம் ஆத்தும தத்துவாய சுவதா.
ஓம் வித்தியா தத்துவாய சுவதா.
ஓம் சிவ தத்துவாய சுவதா.

---

## கலாமந்திரம்.

ஓம் நிவிர்த்தி கலாயை நம.
ஓம் பிரதிஷ்டா கலாயை நம.
ஓம் வித்தியா கலாயை நம.
ஓம் சாந்தி கலாயை நம.
ஓம் சாந்தி யதீத கலாயை நம.

சுருக்க

# அநுட்டானவிதி.

## பூமிசுத்தி.

அஸ்திராயபடு என்று தானிருக்கும் பூமியைச் சலத்துளியினாலே தெளிக்க.

---

## கணபதி குரு வந்தனம்.

கணபதயே நம என்று குட்டி,
குருப்பியோ நம என்று கும்பிடுக.

---

## சலசுத்தி.

அநுட்டான சலத்தை,—

நமசிவாய என்று, வலக்கைச் சுட்டுவிரல் நடுவிரல்களை உள்ளே மடக்கிப் பெருவிரலுக்கும் அணிவிரலுக்கும் நடுவாக, நிரீக்ஷணமும்,

அஸ்திராய படு என்று, பெருவிரனுனியையுஞ் சுட்டுவிரனுனியையுஞ் சேர்த்து ஒலியெழுப்புதலினாலே, திக்குப்பந்தனமும்,

கவசாய வௌஷடு என்று நீட்டிய சுட்டுவிரலினாலே அவகுண்டனமுஞ் செய்க.

---

ஓம் அஸ்திராய படு என்று சுட்டுவிரனீட்டியகை யினுலே தாடனமும்,

ஓம் கவசாயவௌஷடு என்று கவிழ்ந்த பதாகை முத்திரையையுடையகைத்தலத்தினுலே அப் பியுக்ஷணமும், வலக்கைப்பெருவிரலொழிந்த விரல்களினுல் இடவுள்ளங்கையிலே,

ஓம் அஸ்திராய படு என்று மூன்றுதரந் தட்டுத லாகிய தாளத்திரயமும்,

ஓம் அஸ்திராய படு என்று சோடிகைமுத்திரை யினுலே திக்குப்பந்தனமும்,

ஓம் கவசாயவௌஷடு என்று சுட்டுவிரல் நீட்டிய கையினுலே அவகுண்டனமுஞ் செய்து,

ஓம் சிவாயவௌஷடு என்று தேனு முத்திரை கொடுக்க.

---

## அஸ்திர சந்தியோ பாசனம்.

ஓம் அஸ்திராய நம என்று, நிமிர்த்திய பதாகை முத்திரையினுலே சலத்துளியை மூன்றுத ரஞ் சிரசின்மேலே தெளித்து,

## ஆசமனம்.

ஆத்தும தத்துவாய சுவதா.
வித்தியா தத்துவாய சுவதா.
சிவ தத்துவாய சுவதா.

என்று, பெருவிரலடியிற் சார்ந்த உழுந்தமிழ்ந்து சலத்தினால், ஆசமனஞ் செய்து,

அஸ்திராய படு என்று அதரங்களிரண்டையும் பெருவிரலடிகொண்டு இடமாக இரண்டுதரமும், உள்ளங்கை கொண்டு கீழாக ஒருதரமுந் துடைத்துக்கைகழுவி,

இருதயாய வௌஷடு என்று பெருவிரலோடு கூடிய அணிவிரலினாலே, முகம், வலமூக்கு, இடமூக்கு, வலக்கண், இடக்கண், வலக்காது, இடக்காது, கொப்பூழ், மார்பு, வலத்தோள், இடத்தோள், சிரசு என்னும் இப்பன்னிரண்டிடங்களையுந் தொட்டுவிடுக.

---

## விபூதிசுத்தி.

விபூதியை வலக்கைப் பெருவிரல் நடுவிரல் அணிவிரல்களால் எடுத்து, இடக்கையில் வைத்துக்கொண்டு,

அஸ்திராய படு என்று விபூதியிலே சலத்தைத் தெளித்து, அவ்விபூதியில் ஒரு சிறுபங்கைப் பெருவிரல் அணிவிரல்களினாலே தொட்டு,

இடமூக்கு, வலக்கண், இடக்கண், வலக்காது, இடக்காது, கொப்பூழ், மார்பு, வலத்தோள், இடத்தோள், சிரசு என்னும் இப்பன்னிரண்டிடங்களையுந் தொட்டுவிடுக.

---

## விபூதிசுத்தி.

விபூதியை வலக்கைப்பெருவிரல் நடுவிரல் அணிவிரல்களால் எடுத்து, இடக்கையில் வைத்துக்கொண்டு,—

ஓம் அஸ்திராய படு என்று, விபூதியிலே சலத்தைத் தெளித்து, அவ்விபூதியில் ஒறுசிறுபங்கைப் பெருவிரலணிவிரல்களினாலே தொட்டு.

ஓம் அஸ்திராய படு என்று, இராக்ஷதர்பொருட்டு நிருதிமூலையிலே தெறித்து,

ஓம் சிவாய நம என்று நிரீக்ஷணமும்,

ஓம் அஸ்திராய படு என்று புரோக்ஷணமும்,

ஓம் அஸ்திராய படு என்று தாடனமும்,

ஓம் கவசாயவௌஷடு என்று அப்பியுக்ஷணமுஞ்செய்து, விபூதியை வலக்கையால் மூடிக்கொண்டு,

அஸ்திராய படு என்று, இராக்ஷதர்பொருட்டு நிருதிமூலையிலே தெறித்து, விபூதியை,

நமசிவாய என்று நிரீக்ஷணமும்,

அஸ்திராய படு என்று திக்குப்பந்தனமும்,

கவசாய வௌஷடு என்று அவகுண்டனமுஞ் செய்து, வலக்கையான் மூடிக்கொண்டு,

ஈசாநாய நம என்பது முதலிய பதினொருமந்திரத்தாலும் அபிமந்திரிக்க.

---

## விபூதிஸ்நானம்.

வலக்கையின் பெருவிரலணிவிரல்களால் விபூதித்தூளியை எடுத்து,

அஸ்திராய படு என்று தலைதொடங்கிக் காலளவும் பூசி, இடக்கையில் உள்ள விபூதியைப் பெருவிரலோடு கூடிய நடுவிரலினாலே,

இருதயாய நம என்று சலம் விட்டு,

கவசாய வௌஷடு என்று குழைத்து, நடுவிரன்மூன்றினாலும்,

ஈசாநாய நம என்று சிரசிலும்,

தற்புருஷாய நம என்று நெற்றியிலும்,

அகோராய நம என்று மார்பிலும்,

வாமதேவாய நம என்று கொப்பூழிலும்,

ஓம் கவசாயவௌஷடு என்று குழைத்து, நடுவி ரன் மூன்றினாலும்,

ஓம் ஈசாநாய நம என்று சிரசில் மூன்றுதாரமும்.

ஓம் தற்புருஷாய நம என்று நெற்றியில் மூன்று தாரமும்,

ஓம் அகோராய நம என்று மார்பில் மூன்றுதா ரமும்,

ஓம் வாமதேவாய நம என்று கொப்பூழில் ஒருத ரமும்,

ஓம் சத்தியோசாதாய நம என்று வலமுழந்தாள், இடமுழந்தாள், வலப்புயம், இடப்புயம், வல முழங்கை, இடமுழங்கை, வலமணிக்கட்டு, இடமணிக்கட்டு, வலவிலா, இடவிலா, முதுகு, கழுத்து என்னும் மற்றையிடங்களில் ஒவ் வொருதாரமுந் திரிபுண்டரமாகத் தரிக்க.

நெற்றியிலும் மார்பிலும் புயங்களிலும் அவ்வா றங்குலநீளமும், மற்றையிடங்களில் ஒவ்வோ ரங்குலநீளமும் பொருந்தத் தரித்தல் வேண் டும். முக்குறிகளின் இடைவெளி ஒவ்வோ ரங்குல வளவினதாய் இருத்தல் வேண்டும்.

சத்தியோசாதாய நம என்று, வலமுழந்தாள், இடமுழந் தாள், வலப்புயம், இடப்புயம், வலமுழங்கை, இட முழங்கை, வலமணிக்கட்டு, இடமணிக்கட்டு, வல விலா, இடவிலா, முதுகு, கழுத்து என்னும் மற்றை யிடங்களிலுந் திரிபுண்டரமாகத் தரிக்க.

---

## மந்திரஸ்நானம்.

எஞ்சிய விபூதியோடு கைநிறையச் சலம்விட்டு, கும் பகமுத்திரையாகப் பிடித்துக்கொண்டு,

ஈசாநாய நம என்பது முதலிய ஐந்துமந்திரத்தை உச்ச ரித்துச் சிரசிலே புரோக்ஷித்துவிட்டுக் கைகழுவுக.

---

## ஆசமனம்.

முன்போல ஆசமனஞ் செய்க.

---

## பிராணாயாமம்.

வலக்கையிற் சுட்டுவிரலையும் நடுவிரலையும் உள்ளே மடக்கி, பெருவிரலினால் வலமூக்கைப் பிடித்துக் கொண்டு ஒருதரமும், பெருவிரலணிவிரல்களினால் வல இட மூக்குக்களைப் பிடித்துக்கொண்டு ஒருதர மும், அணிவிரலினால் இடமூக்கைப் பிடித்துக்கொ ண்டு ஒருதரமுமாக,

ஓம் சிரசே நம என்று அணிவிரல்களிலும்,

ஓம் சிகாயை நம என்று நடுவிரல்களிலும்,

ஓம் கவசாய நம என்று சுட்டுவிரல்களிலும் நிய சித்து உள்ளங்கைகளிலே,

ஓம் நேத்திரேப்பியோ நம என்று மடக்கிய சுட்டுவிரல் நடுவிரல் அணிவிரல்களாகிய நடுவிரல்கள் மூன்றினுலும் நியசித்து,

ஓம் அஸ்திராய படு என்று, சுட்டுவிரல்களினுலே பெருவிரல்களிலே நியசித்து,

ஓம் கவசாய வௌஷடு என்று கைகளை அவகுண்டனஞ் செய்து,

ஓம் சிவாய வௌஷடு என்று இரண்டுகைகளையுங் கூட்டிக் குவிக்க. [இது கரநியாசம்.]

ஓம் இருதயாய நம என்று வலக்கைப்பெருவிரலோடு கூடிய சிறுவிரலினுலே இருதயத்திலும்,

ஓம் சிரசே நம என்று பெருவிரலோடு கூடிய அணிவிரலினுலே தலையிலும்,

ஓம் சிகாயை நம என்று பெருவிரலோடு கூடிய நடுவிரலினுலே குடுமியிலும் நியசித்து,

ஈசாநாய நம என்பது முதலிய பதினொருமந்திரத்தை மூன்றுதரம் உச்சரித்து,

நமசிவாய என்று வலக்காதைப் பொத்துக.

---

## சிவதீர்த்தகரணம்.

இருதயாய வௌஷடு என்று புருவநடுவில் உள்ள அமிர்தத்தை நுதிவளைந்த சுட்டுவிரலினால் எடுத்துச் சலத்தினிடத்தே வைத்து,

நமசிவாய என்று அபிமந்திரித்து,

அஸ்திராய படு என்று திக்குப்பந்தனமும்,

கவசாய வௌஷடு என்று அவகுண்டனமுஞ் செய்க.

---

## மந்திராபிஷேகம்.

வலக்கையினாற் சலத்தை அள்ளி இடக்கையில் விட்டுக் கும்பகமுத்திரையாகப் பிடித்துக்கொண்டு,

ஈசாநாய நம என்பது முதலிய பதினொரு மந்திரத்தை உச்சரித்துச் சிரசிலே புரோக்ஷிக்க.

---

## மார்ச்சனம்.

சலத்தை வலக்கையான் மூடி,

ஈசாநாய நம என்பது முதலிய பதினொருமந்திரத்தினால் அபிமந்திரித்து, வலக்கையினாலே சலத்தை எடுத்து,

## பிராணாயாமம்.

வலக்கையிற் சுட்டுவிரலையும் நடுவிரலையும் உள்ளே மடக்கிப் பெருவிரலினால் வலமூக்கைப் பிடித்துக்கொண்டு ஒருதரமும் பெருவிரலை அணிவிரல்களினால் வல இட மூக்குக்களைப் பிடித்துக்கொண்டு ஒருதரமும் அணிவிரலினால் இடமூக்கைப் பிடித்துக்கொண்டு ஒருதரமுமாக,

ஓம் ஈசானாய நம என்பது முதலிய பதினொரு மந்திரத்தை மூன்றுதரம் உச்சரித்து,

ஓம் சிவாய நம என்று வலக்காதைப்பொத்துக.

வலமூக்கைப் பிடித்துக்கொள்ளும்பொழுது புறத்தேயுள்ள சுத்தவாயுவை இடமூக்கினாலே வாங்கி உள்ளே நிரப்புக; [இது பூரகம்.] இரண்டு மூக்கையும் பிடித்துக்கொள்ளும்பொழுது உள்ளே உள்ள வாயுவை அங்கே நிறுத்துக; [இது கும்பகம்.] இடமூக்கைப் பிடித்துக்கொள்ளும்பொழுது உள்ளேயுள்ள அசுத்தவாயுவை வலமூக்கினாலே புறத்தே கழிக்க. [இது இரேசகம்.]

இடக்கையில் விட்டுவைத்துக்கொண்டு, அவ்விடக் கையினின்றுங் கீழே ஒழுகுகின்ற சலத்தை வலக் கையினாலே,

ஈசாநாய வௌஷடு என்பது முதலிய பதினொருமந்திரத் தினாலே சிரசின்மேலே தெளித்துவிடுக.

---

## அகமர்ஷணம்.

எஞ்சிய சலத்தை இடக்கையினின்றும் வலக்கையில் விட்டு, மூக்குக்குச் சமீபத்திலே பிடித்துக்கொண்டு, அந்தச் சலம் வெண்ணிறமுடைய தருமவடிவமாகி இடமூக்கினாலே உள்ளே புகுந்து அங்குள்ள பாவத் தை அழித்ததாகவும், அந்தப்பாவம் மைக்குழம்பு போல வலமூக்கினாலே புறத்தே நீங்கிக் கையில் வந்ததாகவும் பாவித்து, வலக்காற்பெருவிரலிற்சுவா லிக்கும் அக்கினியிலே,

அஸ்திராய உம் படு என்று புருவமுரிப்புடனே விட்டு, அந்தப்பாவஞ் சாம்பரானதாகப் பாவித்து,

அஸ்திராய படு என்று கை கழுவுக.

---

## ஆசமனம்.

முன்போல ஆசமனஞ் செய்க.

---

கும் அக்ஷமாலையும் இடக்கையிரண்டிலுந் தண்டுங் கமண்டலமும் உடையவளாய், பூணூலுஞ் சிவந்த ஆபரணமுஞ் சிவந்தபுடைவையுந் தரித்தவளாய், இளம்பருவமும் சத்துவகுணமும் உடையவளாய், சகலகரும சாக்ஷிணியாயுள்ள பிராமியை இருதயத்திலே தியானித்து, அந்தச் சத்தியினுடைய செவ்வொளிமண்டலத்தினுள்ளே தன்னுடைய ஆன்மாவுஞ் சரீரமும் அடங்கினவைகளாகச் சிந்தித்துக்கொள்க.

இடபவாகனத்தின்மேலே பதுமாசனம்பொருந்த இருப்பவளாய், நீலநிறத்தினளாய், ஒருமுகமும் இளம்பிறைதாங்கிய சடையும் மூன்றுகண்ணும் நான்குகையும் வலக்கையிரண்டிலுஞ் சூலமும் அக்ஷமாலையும் இடக்கையிரண்டிலும் அபயமும் வேலும் உடையவளாய், சற்றே யௌவனந்திரும்பிய பருவமுந் தாமசகுணமுமுடையவளாய் உள்ள ரௌத்திரியைப் பிரமரந்திரத்திலே தியானித்து, அந்தச்சத்தியினுடைய நீலஒளிமண்டலத்தினுள்ளே தன்னுடைய ஆன்மாவுஞ் சரீரமும் அடங்கினவைகளாகச் சிந்தித்துக்கொள்க.

---

## கவசவேஷ்டனம்.

கவசாய வௌஷடு என்று வலக்கையிற் சலத்தினாலே தன்னை வலமாகச் சுற்றுக.

---

## தருப்பணம்.

இரண்டு கையுநிறைந்த சலத்தினாலே,
நமசிவாய என்று மூன்றுதரந் தருப்பணஞ் செய்து,
நமசிவாய என்று பத்துத்தரஞ் செபித்து,
நமசிவாய என்று மீட்டும் ஒருதரந் தருப்பணஞ் செய்து,
ஈசாநாய சுவாகா என்பது முதலிய பதினொருமந்திரத்தினால் ஒவ்வொருதரந் தருப்பணஞ் செய்து,
உமாதேவ்யை சுவாகா என்றும்,
கணபதயே சுவாகா என்றும்,
சரவணபவாய சுவாகா என்றும் ஒவ்வொருதரந் தருப்பணஞ் செய்க.

---

## ஆசமனம்.

முன்போல ஆசமனஞ் செய்க.

---

## தீர்த்தோபசங்காரம்.

முன்னே சலத்தில் வைத்த அமிர்தத்தை,
இருதயாய வௌஷடு என்று, நதிவளைந்த சுட்டுவிரலினால் எடுத்துப் புருவநடுவிலே ஒடுக்கிவிடுக.

---

## அகமர்ஷணம்.

எஞ்சிய சலத்தை இடக்கையினின்றும் வலக்கையில்விட்டு, மூக்குக்குச் சமீபத்திலே பிடித்துக்கொண்டு, அந்தச்சலம் வெண்ணிறமுடைய தருமவடிவாகி இடமூக்கினுலே உள்ளேபுகுந்து அங்குள்ள பாவத்தை அழித்ததாகவும், அந்தப் பாவம் மைக்குழம்புபோல வலமூக்கினுலே புறத்தே நீங்கிக் கையில் வந்ததாகவும் பாவித்து, வலக்காற்பெருவிரலிற் சுவாலிக்கும் அக்கினியிலே,

ஓம் அஸ்திராய உம்படு என்று புருவமுரிப்புடனே விட்டு, அந்தப் பாவஞ் சாம்பரானதாகப் பாவித்து,

ஓம் அஸ்திராய படு என்று கைகழுவுக.

---

## ஆசமன சகளீகரணம்.

முன்போல ஆசமனமுஞ் சகளீகரணமுஞ் செய்க.

---

## கவசவேஷ்டணம்.

ஓம் கவசாய வௌஷடு என்று வலக்கையிற் சலத்தினுலே தன்னை வலமாகச் சுற்றுக.

MAHAMAHOPADHYAYA
DR. U. V. SWAMINATHA IYER LIBRARY

## சூரியோபஸ்தானம்.

இரண்டுகையுநிறையச் சலம்விட்டுப் பிடித்துக்கொண்டு,

ஈசாநாயநம என்பது முதலிய பதினொருமந்திரத்தை உச்சரித்து,

சிவசூரியாய சுவாகா என்று ஒருதரந் தருப்பணஞ்செய்க.

---

## செபவிதி.

அஸ்திராய படு என்று, தான் இருக்கும் பூமியைச் சலத்தினாலே புரோக்ஷித்து,

வடக்குமுகமாக ஆசனத்திருந்து, முன்போலக் குட்டிக் கும்பிட்டு, பிராணாயாமஞ் செய்து, சிவபெருமானுடைய உருவத்திருமேனியாகிய உருத்திர வடிவத்தைத் தியானிக்க.

## உருத்திரத்தியானம்.

மைக்களமு மான்மழுவும் வரதமுட னபயமுறும்
மெய்க்கரமு நாற்புயமும் விளங்குபணிக் கொடும்பூணுஞ்
செக்கருறு மதிச்சடையுஞ் சேயிழையோர் பாகமுமாய்
முக்கணிறை யாங்காண முன்னின்றே யருள்புரிந்தான்.

இப்படித் தியானித்துக்கொண்டு, சிவமூலமந்திரத்தை நூற்றெட்டுத்தரமும், தேவிமூலமந்திரம் கணபதி [illegible]

## தீர்த்தோபசங்காரம்.

முன்னே புருவநடுவினின்றும் எடுத்துச் சலத்தினிடத்திலே வைக்கப்பட்ட அமிர்தத்தை,

ஓம் இருதயாயவௌஷடு என்று சங்காரமுத்திரையினால் எடுத்துப் புருவநடுவிலே ஒடுக்கிவிடுக.

---

## சூரியோபஸ்தானம்.

இரண்டுகையுநிறையச் சலம்விட்டுப் பிடித்துக்கொண்டு,

ஓம் ஈசாநாய நம என்பது முதலிய பதினொருமந்திரத்தை உச்சரித்து,

ஓம் சிவாய சுவாகா என்று ஆதித்தியமூர்த்தியின் நடுவிலிருக்கும் பரசிவனிடத்தே கொடுத்து,

ஓம் சிவசூரியாய சுவாகா என்று ஒருதரந்தருப்பணஞ்செய்துவிடுக.

---

## செபநிவேதனம்.

தான் இருக்கும் பூமியை,

ஓம் அஸ்திராய படு என்று சலத்தினாற் புரோக்ஷித்து, வடக்குமுகமாக ஆசனத்திருந்து, முன்

MADURAMAUDAKAUVAN

மூலமந்திரம் சுப்பிரமணிய மூலமந்திரம் என்னும் இவை களைத் தனித்தனியே பத்துத்தாமுஞ் செபித்து, பின்பு முன்போலக் குட்டிக் கும்பிட்டுப் பிராணுயாமஞ் செய்து தோத்திரம்பண்ணுக.

## சிவஸ்தோத்திரம்.

முடிகொண்ட மத்தமு முக்கண்ணி ஞேக்கு முறுவலிப்புந்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண் ணீறுஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென் பாவிநெஞ்சிற
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே.

கடையவ னேனைக் கருணையி ஞற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்றோல்
உடையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்காசே
சடையவனேதளர்ந்தேனெம்பிரானென்னைத்தாங்கிக்கொள்ளே.

வேதநா யகனே போற்றி விண்ணவர் தலைவா போற்றி
மாதொரு பாகா போற்றி மறுசம யங்கண் மாளப்
பேதகஞ் செய்வாய் போற்றி பிஞ்ஞகா போற்றி யான்செய்
பாதக மனைத்துந் தீர்க்கும் பராபரா போற்றி போற்றி.

சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளாடுந்திரு வடிபோற்றி.

நுத்தரமுஞ் செபித்து, பின்பு முன்போலக் குட்டிக் கும்பிட்டு, பிராணாயாமமுஞ் சகளீகரணமுஞ் செய்து தோத்திரம்பண்ணுக.

## சிவஸ்தோத்திரம்.

முடிகொண்டமத்தமுமுக்கண்ணினோக்குமுறுவலிப்பும்
துடிகொண்டகையுந்துதைந்தவெண்ணீறுஞ்சுரிகுழலாள்
படிகொண்டபாகமும்பாய்புலித்தோலுமென்பாவிநெஞ்சிற்
குடிகொண்டவாதில்லையம்பலக்கூத்தன்குரைகழலே.

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையி
னிறைமலர்க் குருந்த மேவியசீ
ராதியே யடியே னாதரித் தழைத்தா
லதெந்துவே யென்றரு ளாயே.

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த

## தேவிஸ்தோத்திரம்.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

## விநாயகஸ்தோத்திரம்.

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

## சுப்பிரமணியஸ்தோத்திரம்.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

## சமயகுரவர்நால்வர்ஸ்தோத்திரம்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

கல்லாப்பிழையுங்கருதாப்பிழையுங்கசிந்துருகி
நில்லாப்பிழையுநினையாப்பிழையுநின்னைந்தெழுத்தைச்
சொல்லாப்பிழையுந்துதியாப்பிழையுந்தொழாப்பிழையும்
எல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்பனே.

## தேவி ஸ்தோத்திரம்.

பாரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

## விநாயக ஸ்தோத்திரம்.

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

## சுப்பிரமணிய ஸ்தோத்திரம்.

ஏறுவிருமுகங்கள்போற்றிமுகம்பொழிகருணைபோற்றி
வெருந்துதிக்கநின்றவிராறுதோள்போற்றிகாஞ்சி
மாவடிவைகுஞ்செவ்வேண்மலரடிபோற்றியன்னான்
சேவலுமயிலும்போற்றிதிருக்கைவேல்போற்றிபோற்றி.

## அறுபத்துமூவர்தோத்திரம்.

தத்து மூதெயின் மூன்றுந் தழலெழ
முத்து மூரன் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் றுளிணை சேரறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

இப்படித் தோத்திரம்பண்ணியபின்பு எழுந்து,

இந்திராய நம என்று கிழக்கிலும்,
அக்நயே நம என்று தென்கிழக்கிலும்,
யமாய நம என்று தெற்கிலும்,
நிருதயே நம என்று தென்மேற்கிலும்,
வருணாய நம என்று மேற்கிலும்,
வாயவே நம என்று வடமேற்கிலும்,
குபேராய நம என்று வடக்கிலும்,
ஈசாநாய நம என்று வடகிழக்கிலுங் கும்பிட்டு,

பார்வதீசமேதபரமேசுவராய நம என்று, வடக்கு நோக்கி மூன்றுதரஞ் சாட்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்து ஆசமனஞ் செய்து,

அஸ்திராய படு என்று இருக்குமிடத்தைச் சலத்தினுற் றெளித்து, அதனைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டு சலத்தைத் தூரத்திலே கால்படாவிடத்தில் விட்டுவிடுக.

முற்றிற்று.

---

ஓம் பார்வதீசமேத பரமேசுவராய நம என்று வடக்குநோக்கிமூன்றுதரஞ் சாட்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்து ஆசமனஞ்செய்து,

ஓம் அஸ்திராயபடு என்று இருக்குமிடத்தைச் சலத்தினாற் றெளித்து, அதனைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டு, சலத்தைத் தூரத்திலே கால்படாவிடத்தில் விட்டுவிடுக.

அநுட்டானவிதி

முற்றிற்று.

---

[illegible]
[illegible]

# சூரியநமஸ்காரவிதி.



சூரியமண்டலத்தைத் தரிசித்து, வெண்டாமரைப் பூவின்மேலே செவ்வொளியையுடைய வட்டமண் டலத்தின் நடுவேயுள்ளவராய் மாதுளம்பூ நிறத்தின ராய் ஒருதிருமுகமும் இரண்டுதிருக்கண்ணும் இர ண்டுதிருப்புயத்திலும் பொருந்திய அலர்ந்த வெண் டாமரைப்பூநாளம் இரண்டு பிடித்த இரண்டு திருக் கையும் உடையவராய்ச் சிவந்த வஸ்திரந் தரித்தவ ராய் உள்ள சூரியமூர்த்தியைத் தியானித்து,

சிவசூரியாய நம என்று செந்தாமரைப்பூ முதலிய செம்பூ க்களைத் தூவி,

பேசரியவெண்டாமரையாசனனாகிச்சிவந்த
பேரொளிசேர்தருவிருத்தமண்டலமத்தியனாய்
ஆசறுமாதுளங்கமலர்போலுநிறத்தினனாய்
அலர்ந்தனவாயிருபுயங்களடைந்தவெண்டாமரையின்
காசறுநாளம்பிடித்தகையிரண்டினோடு
கருதுமொருமுகமிரண்டுகண்களுடையவனாய்த்
தேசுமலிசெய்யவுடைதனையுடுத்தோனாகித்
திகழ்சிவசூரியனைநிதஞ்சிந்தைசெய்திடுவாம்.

விளங்குதண்டிமுதலோராற்சேவிக்கப்படுவோன்
விமலன்முதனாற்சிங்கபதாசனத்தின்மேலோன்
களங்கமிலாத்தீக்ஷைமுதற்சத்திகணசகிதன்
கருதருணமணியொளியன்கடோற்காண்மமூர்த்தி

# சூரியநமஸ்காரவிதி.



சூரியமண்டலத்தைத் தரிசித்து, வெண்டாமரைப்பூவின்மேலே செவ்வொளியையுடைய வட்டமண்டலத்தினடுவே உள்ளவராய் மாதுளம்பூ நிறத்தினராய் ஒருதிருமுகமும் இரண்டு திருக்கண்ணும் இரண்டு திருப்புயத்தினும் பொருந்திய அலர்ந்த வெண்டாமரைப்பூ நாளம் இரண்டு பிடித்த இரண்டு திருக்கையும் உடையவராய்ச் சிவந்த வஸ்திரந் தரித்தவராய் உள்ள சூரியமூர்த்தியைத் தியானித்து,

ஓம் சிவசூரியாய நம என்று செந்தாமரைப்பூ முதலிய செம்பூக்களைத் தூவி,

பேசிடுவெண்டாமரையாசனத்திற்சிவந்த
பேரொளிசேர்தருவிருத்தமண்டலமத்தியனைப்
ஆசறுமாதுளங்கமலர்போலுநிறத்தினனை
அலர்ந்தனவாயிருபுயங்களடைந்தவெண்டாமரையின்
காசறுநாளம்பிடித்தகையிரண்டினோடு
கருதுமொருமுகமிரண்டுகண்களுடையவனைத்
தேசுமலிசெய்யவுடைதனையுடுத்தோனைத்
திகழ்சிவசூரியனைநிதஞ்சிந்தனைசெய்திடுவாம்.

# சூரியநமஸ்காரவிதி.

துளங்கலிறன்னங்கந்தன்னங்கமெனுங்கிரகங்
தொகுமுடிவாதியசூழச்சுவேதகஞ்சத்திவர்ந்தோன்
வளங்கொள்சுவேதாம்புசத்தோட்கரனிருநல்விழியோன்
வருசிவசூரியன்காக்கமகிழ்ந்தடியேங்களையே.

என்று தோத்திரம்பண்ணி இரண்டுதரம் ஆன்மப்பிரதக்ஷிணஞ்செய்து,

வைகர்த்தாய நம.
விவஸ்வதே நம.
மார்த்தாண்டாய நம.
பாஸ்கராய நம.
ரவயே நம.
லோகப்பிரகாசகாய நம.
லோகசாக்ஷிணே நம.
திரிவிக்கிரமாய நம.
ஆதித்தியாய நம.
மகாசூரியாய நம.
அம்சுமாலினே நம.
திவாகராய நம.

என்னும் பன்னிரண்டு திருநாமத்தைச் சொல்லிப் பன்னிரண்டு நமஸ்காரஞ் செய்து, எழுந்து, கும்பிட்டு விரும்பிய வரங்களை வேண்டிக்கொள்க.

---

மென்னும் பன்னிரண்டு திருநாமத்தைச் சொல்லிப் பன்னிரண்டு நமஸ்காரஞ்செய்து, வலம்வந்து, கும்பிட்டு விரும்பிய வரங்களை வேண்டிக்கொள்க.

---

# கோபூசாவிதி.

ஓம் கபிலே நந்தே நம.
ஓம் கபிலே பத்திரே நம.
ஓம் கபிலே சுசீலே நம.
ஓம் கபிலே சுரபே நம.
ஓம் கபிலே சுமநசே நம.

என்று பசுவைப் பூசித்து அதற்கு ஒருபிடி புல்லுக்கொடுக்க.

---

# போசனவிதி.

அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்குமோவிப் பிறவியே.

1223
(6173)

# கோபூசாவிதி.

கபிலே நந்தே நம.

கபிலே பத்திரே நம.

கபிலே சுசீலே நம.

கபிலே சுரபே நம.

கபிலே சுமநசே நம.

என்று பசுவைப் பூசித்து, அதற்கு ஒருபிடி புல்லுக் கொடுக்க.

---

# போசனவிதி.

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே.

என்னுந் தேவாரத்தை மனசினாலாவது வாக்கினாலாவது உச்சரித்துக்கொண்டு,

அஸ்திராய படு என்று வலக்கையணிவிரலினால் அன்னத்தின்மேலே சலம் புரோக்ஷித்து,

திலே கொப்பளித்து, கைகால் கழுவி, நெற்றியிலே "சிவசிவ" என்று விபூதி இட்டுக்கொள்க.

இரவிலே போசனம் பண்ணும்பொழுது விளக்கவிந்தால், போசனம்பண்ணாது அவ்வன்னத்தை வலக்கையினாலே மூடி, விளக்கேற்றிவரும்வரையுஞ் சிவமூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக்கொண்டிருந்து, விளக்கேற்றிவந்தபின் போசனம்பண்ணுக.

திருச்சிற்றம்பலம்.

மகாமகோபாத்யாய, டாக்டர்.

சிவகுருபபிழ்யோனைவேத்தியம் சுவாகா என்று, சிவபெரு
மானுக்கும் குரவருக்கும் நிவேதனஞ்செய்து, வல
வுள்ளங்கையிலே சலத்தைவிட்டு,

ஈசாநாய சுவாகா என்று அந்த அன்னத்தைச் சுற்றி, எஞ
சிய உழுந்தமிழ்ந்து சலத்தை,

தற்புருஷாய சுவாகா என்று ஆசமனஞ்செய்து அனனத
தைப பிசைந்து,

அஸதிராய உம் படு என்று உதராக்கினியைச்சொலி ப
பித்து,

நமசிவாய என்று மனசிலே சிந்தித்து, அந்தசிந்தனை
யோடு போசனஞ்செய்துகொண்டு, எழுந்து, புறத
தேபோய்க் கையிரண்டுங் கழுவிச் சலம வாயிலே
கொண்டு, இடப்பக்கத்திலே கொபபளித்து, கை
கால்கழுவி, நெற்றியிலே "சிவ சிவ" என்று
விபூதி இட்டுக்கொள்க.

இரவிலே போசனம் பண்ணும்பொழுது விளககவிந
தால், போசனம்பண்ணாது, அவ்வன்னத்தை வலக
கையினுலே மூடி, விளக்கேற்றிவரும்வரையுஞ் சிவ
மூலமந்திரத்தை மனசிலே சிந்தித்துக்கொண்டிரு
ந்து, விளக்கேற்றிவந்தபின் போசனம் பண்ணுக.

திருச்சிற்றம்பலம்.

சென்னை-20.

உ

கணபதி துணை.

# குருவாக்கியம்.




யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

செய்தது.





இது

மேற்படியார் மருகரும், மாணாக்கரும்,

வித்துவசிரோமணியுமாகிய

ந. ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

மாணாக்கர்

சுவாமிநாதபண்டிதரால்

சென்னபட்டணம்

தமது

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பிலவங்க௵ கார்த்திகைமீ

உ

கணபதி துணை.

# குருவாக்கியம்.



இது ஆசாரியர் சிஷ்யருக்குச் சமயதீக்ஷை செய்யும் போது போதிக்கத்தக்கது.

அன்பர்களே!

க. ஆன்மாக்களுக்கு, எந்தச்சரீரத்திலும் மனிதசரீரங் கிடைப்பது மிக அரிது; மனிதசரீரங் கிடைத்தாலும், சைவசமயம் வழங்குந் தேசத்திலே பிறக்கக் கிடைப்பது அதினும் மிக அரிது; சைவசமயம் வழங்குந்தேசத்திலே பிறக்கக் கிடைத்தாலும், சைவசமயத்திலே பிரவேசிக்கக் கிடைப்பது அதினும் மிக அரிது. சைவசமயத்தை அநுட்டித்து முத்தியின்பம் பெறும்பொருட்டே மனிதசரீரங் கிடைத்தது.

உ. சைவசமயம் என்பதற்குப் பொருள் சிவபெருமானை வழிபடு மார்க்கம். சிவபெருமான் பிறப்பிறப்பின்றி என்றும் உள்ளவர், எங்கும்நிறைந்தவர், இயல்பாகவே எல்லாம் அறிபவர், எல்லாஞ் செய்ய வல்லவர், தமது அனுபவத்தின் பொருட்

டுப் பிறிதொன்றையும் வேண்டாதவர், பிறர் வச த்தினராகாது தம்வசத்தினராயே உள்ளவர், பசு க்களாகிய உயிர்களிடத்துள்ள இரக்கமே திருமே னியாக உடையவர். இவ்விலக்கணங்களெல்லாம் உடையவர் சிவபெருமான் ஒருவரேயன்றி வேறி ல்லை. ஆதலாற் சிவபெருமான் ஒருவரே பசுக்களு க்குப் பதி. சிவபெருமானிலும் உயர்ந்தவர் உண் டென்றுவது சிவபெருமானுக்குச் சமத்துவம் உடையவர் உண்டென்றுவது கொள்வது சிவநிந் தை. இவ்வுண்மையெல்லாம் அறிந்து சிவபெரு மான் ஒருவரையே வழிபடுஞ் சமயம் சைவசமயம்.

௩. பசுபதியாகிய சிவபெருமானை வழிபடு நெறியையும், சிவபெருமானுடைய ஏவல்வழி ஒழு கும் பசுக்களாகிய தேவர்களை வழிபடு நெறியை யும் அறிவிக்கும்பொதுநூல் வேதம்; சிவபெரு மானை வழிபடுநெறியையே விரித்து அறிவிக்குஞ் சிறப்புநூல் சிவாகமம்; சிவபெருமானை வழிபடுத ற்கு யோக்கியதையைப்பிறப்பிப்பது சிவாகமத் தில் விதித்த சிவதீக்ஷை; சிவபெருமானுடைய அடையாளங்கள் விபூதி உருத்திராக்ஷம்; சிவபெ ருமானுடைய மூலமந்திரம் ஸ்ரீ பஞ்சாக்ஷரம்; சிவ பெருமானை மிக மகிழ்விக்குந் தோத்திரங்கள் தே வார திருவாசகம்; சிவபெருமானை வழிபடும் இட ங்கள் குரு லிங்க சங்கமம். குரு என்றது தீக்ஷை

செய்யுங் குருவையும், சைவசமயத்தைப் போதிக்குங் குருவையும், சைவசமயநூலைப் படிப்பிக்குங் குருவையும். லிங்கம் என்றது சிவஞானிகளுடைய பாவனையுற்றுத் திருக்கோயிலுள்ளிருக்குந் திருவுருவங்களை. சங்கமம் என்றது சிவதீக்ஷைபெற்று விபூதி உருத்திராக்ஷந் தரித்துச் சிவாலயத்தொண்டு சிவபூசை சிவசாத்திரம்படித்தல் முதலியன செய்யுஞ் சிவனடியார்களை.

## அன்பர்களே!

௪. உங்களுக்கு மனிதசரீரங் கிடைத்தது. அம்மட்டோ! சைவசமயம் வழங்குந் தேசத்திலே பிறக்கவுங் கிடைத்தது. சிவபெருமான் உங்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டு இங்கே இந்தக் கும்பத்திலும் இந்த மண்டலத்திலும் இந்த அக்கினியிலும் நம்மாலே ஆவாகித்துப் பூசிக்கப்பட்டு உங்களுக்கு அண்ணியரானார். சிவபெருமான் உங்களுக்குத் தீக்ஷையாகிய அநுக்கிரகத்தைச் செய்யும்பொருட்டு இடங்கொண்டு மறைந்துநின்று செலுத்துங் குருவடிவம் நாம். நாம் இங்கே இப்பொழுது உங்களுக்குச் சமயதீக்ஷை செய்யப் பெற்றீர்கள். இந்தச் சமயதீக்ஷை வாயிலாக நீங்கள் சைவசமயத்திலே பிரவேசித்தீர்கள். விபூதியை மந்திரத்தோடு தரிக்கப்பெற்றீர்கள். ஸ்ரீ பஞ்சாக்ஷ

ரத்தை நாம் உபதேசிக்கப்பெற்றீர்கள். தேவார திருவாசகம் ஓத அதிகாரம் பெற்றீர்கள். குரு லிங்க சங்கமங்களுக்குத் தொண்டுசெய்ய உரிமை பெற்றீர்கள். எல்லாவகையாலும் பசுபதியாகிய சிவபெருமானுக்கே அடிமைபூண்டீர்கள்.

ரு. இனி மரணபரியந்தம் அநுட்டிக்கலாகாத கருமங்கள் எவை அநுட்டிக்கத்தக்க கருமங்கள் எவை என்று நீங்கள் நன்றாக ஆராய்ந்து அறிந்துகொள்ளல்வேண்டும். அநுட்டிக்கலாகாத கருமங்களை மரணபரியந்தம் விலக்கிவிடல்வேண்டும். அநுட்டிக்கத்தக்க கருமங்களை மரணபரியந்தம் அநுட்டித்தல் வேண்டும்.

சா. பெரும்பான்மையும் எல்லாச் சமயத்தாரும் விலக்கத்தக்க பாதகங்கள் உயிர்க்கொலை, களவு, கள்ளுணல், மற்சமாமிசம்புசித்தல், பொய், வியபிசாரம் முதலியவைகள். இவைகளை நீங்கள் ஒருபொழுதுஞ் செய்யலாகாது.

எ. பிதா மாதா முதலிய பெரியோர்களை ஒரு சிறிதும் அவமதியாது எந்நாளும் மிக்க மரியாதை செய்து பாதுகாத்து நடத்தல் வேண்டும். வறியவர்களாயுந் தொழில்செய்து சீவனஞ்செய்ய வல்லமை இல்லாதவர்களாயும் உள்ள கூனர் குருடர் முடவர் வியாதியாளர் கிழவர் இவர்களுக்குச் சம

யம் வாய்க்கும்பொழுது உங்களாலே கூடிய உதவி செய்தல்வேண்டும். உங்களுக்குத் தீமை செய்தவர்களுக்கும் நீங்கள் நன்மையே செய்தல்வேண்டும். இவையெல்லாம் எல்லாச் சமயத்தாருக்கும் வேண்டப்படுந் தருமங்கள்.

அ. சிவநிந்தை, குருநிந்தை, சிவனடியார்நிந்தை, சிவசாத்திரநிந்தை, சிவத்திரவியத்தைக்குருத்திரவியத்தை உபயோகித்தல் முதலாயின அதிபாதகங்களாகிய சிவத்துரோகங்கள். இவைகளை நீங்கள் மறந்துஞ் செய்யாது மரணபரியந்தஞ் சாவதானமாக இருத்தல்வேண்டும்.

கூ. நியமமாக நாடோறும் அநுட்டானஞ் செய்து சிவபெருமானைத் தியானித்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தில் இயன்ற உருச்செபித்துச் சிவபெருமானைத் தோத்திரஞ்செய்தல்வேண்டும். பெண்கள் வீட்டுக்கு விலக்கானால் மூன்றுநாளும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மனசினாலே சிந்தித்தல்வேண்டும். நாலாநாள் ஸ்நானஞ் செய்தபின் அநுட்டானம் பண்ணலாம்.

கo. விபூதி நெற்றியில் எப்பொழுதுந் தரித்துக்கொள்ளல் வேண்டும். கீழே சிந்தாவண்ணம் அண்ணாந்து "சிவசிவ" என்று சொல்லி வலக்கையின் நடுவிரல் மூன்றினாலுந் தரித்தல்வேண்டும்.

விபூதிதரியாத முகஞ் சுடுகாட்டுக்குச் சமம். ஆதலால் விபூதி தரித்துக்கொண்டே புறத்திற் புறப்படல் வேண்டும்.

கக. தினந்தோறுமாவது புண்ணியகாலங்களிலாவது திருக்கோயிலுக்குப்போய்ச் சிவலிங்கப்பெருமானைத் தரிசித்து வணங்கி வலம் வந்து துதித்தல் வேண்டும். உங்களாலே கூடியபொழுது திருக்கோயிலிலே சுகந்த தூபமிடுங்கள்; திருவிளக்கேற்றுங்கள்; திருவலகிடுங்கள்; திருமெழுக்கிடுங்கள்; திருநந்தனவனம்வையுங்கள்; சுசியோடு புஷ்பமெடுத்துத் திருமாலைகட்டிக்கொடுங்கள்; திருவீதியில் உள்ள புல்லைச் செதுக்குங்கள்.

கஉ. குருவையுஞ் சிவனடியார்களையுங் கண்டால் உடனே இருக்கை விட்டெழுந்து கும்பிட்டு நமஸ்காரஞ் செய்யுங்கள்; அவர்களெதிரே இருக்குமுறையறிந்து இருங்கள்; பேசுமுறையறிந்து பேசுங்கள்; அவர்களை எவராயினுங் குற்றம் பேசினால் உடனே காதைப்பொத்திக்கொண்டு அவ்விடத்தினின்றும் போய்விடுங்கள்.

கங. சிவபெருமானின் வேறாகாத திருவருள் என்கின்ற சிவசத்தியே பார்வதி தேவியார். ஆதலால் அவரை வழிபடுவது சிவபெருமானைவழிபடுவதேயாம். புண்ணியஞ் செய்தவர்களுக்கு அநு

க்கிரகமும் பாவஞ் செய்தவர்களுக்கு நிக்கிரகமுஞ் செய்யும்பொருட்டுச் சிவபெருமான் கருணையினுலே கொண்டருளிய மூர்த்தங்கள் அவருடைய திருக்குமாரர்கள் எனப்படுகிற விநாயகக்கடவுள் சுப்பிரமணியக்கடவுள் வைரவக்கடவுள் வீரபத்திரக்கடவுள். ஆதலால் அவர்களை வழிபடுவதுஞ் சிவபெருமானை வழிபடுவதேயாம். குருவினிடத்தும் சிவனடியார்களிடத்தும் சிவசின்னமும் சிவ மந்திரமும் சிவநாமமும் சிவமகிமையும் சிவசாத்திரமும் விளங்கக் காண்டலினுல் அவர்களை வழிபடுவதுஞ் சிவபெருமானை வழிபடுவதேயாம். இப்படியன்றி, உயிர்ப்பலியேற்குந் துட்டதேவதைகளையும் வீரன் மாடன் கறுப்பன் முதலிய பிசாசுகளையும் வணங்கலாகாது. வணங்குவீர்களானுல், சிவபெருமானுடைய சாபம் உங்களுக்குத் தப்பாது கிடைக்கும்.

கச தேவார திருவாசகத் திருமுறையையும் சிவபுராணத் திருமுறையையும் மடியிலாவது நிலத்திலாவது ஆசனத்திலாவது சயனத்திலாவது வைக்கலாகாது. பீடத்திலாவது பட்டுப்பரிவட்டத்திலாவது காவிப்பரிவட்டத்திலாவது வைத்தல் வேண்டும்.

கரு. திருக்கோயிலிலாவது திருமடத்திலாவது தேவார திருவாசகம் ஓதப்படும்பொழுதும்,

சைவப்பிரசங்கஞ் செய்யப்படும் பொழுதும், சிவ புராணம் படிக்கப்படும் பொழுதும், நீங்கள் போய்ச் சிரத்தையோடு கேட்டல் வேண்டும்.

கசு. நீங்கள் ஓரோர் காலத்து அறிந்தேனும் அறியாதேனும் அநுட்டிக்கலாகாத கருமங்களை அநுட்டித்தாலும், அநுட்டிக்கத்தக்க கருமங்களை அநுட்டியாதொழிந்தாலும் மனம் பதைபதைத்துக் குருவை அடைந்து விண்ணப்பஞ்செய்து குரு முன்னிலையாகப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளல் வேண்டும். பிராயச்சித்தமாவது செய்தபாவத்தைப் போக்கும் வாயில்.

கஎ. பெறுதற்கரிய மனித சரீரமும் சைவசமய தேசப்பிறப்பும் சைவசமயப் பிரவேசமும் பெற்ற நீங்கள், இவை வீண் போகாவண்ணம் நாம் இங்கே போதித்தபடி ஒழுகிச் சிவபெருமானுடைய திருவருளைப் பெற்று வாழக்கடவீர்கள்.

குருவாக்கியம்

முற்றிற்று.

---

மஹாமஹோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்.